3rd April 1958]

SRI S. M. ANNAMALAI : பாகிஸ்தானிலிருந்து வரும் அகதி களுக்கு உதவி செய்வதைப் போல, ஸிலோன், பர்மா அகதிகளுக்கும் உதவி செய்ய சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஸிலோன், பர்மா அகதிகளுக்கும் இதே மாதிரி உதவி செய்யலாம். அவர்களும் இதே மாதிரி ஈடுபடவேண்டும்.

SRI V. SUBBIAH : அகதிகளாக இருக்கக்கூடியவர்களுக்கு பொருள் உதவி செய்வதோடு கூட அவர்கள் கைத்தொழில் செய்வதற்கு உதவியோ அல்லது விவசாயம் செய்வதற்கு நிலங்களோ கொடுக்கப்படுவதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவர்கள் வீடு கட்டிக்கொள்ளுவதற்கும், ஒரு தொழிலை தொடங்குவதற்கும் இம்மாதிரி கடன் வசதி கொடுக்கப்படுகிறது என்று சொன்னேன். குறிப்பாக ஏதாவது ஒரு தொழிலில் ஈடுபட்டு, அதற்கு உதவ வேண்டுமென்று கோரினால் அதுவும் அப்போதைக்கப்போது கருதப்பட்டு வருகிறது.

*Spinning mills*

*** 531 *Q.*—SRI A. R. MARIMUTHU : Will the Hon. the Minister for Industries be pleased to state—**

**(*a*) the number of spinning mills started in 1957 ;**

**(*b*) the capital invested on them ; and**

**(*c*) the number of workers employed in them ?**

**THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) 27.**

**(*b*) Information is not available.**

**(*c*) 2,083 workers.**

SRI A. R. MARIMUTHU : சிறு கைத்தொழில் மூலமாக நம் நாட்டில் நூல் உற்பத்தி செய்ய முடியும். அதனால் அதிகமான பேர்களுக்கு வேலை கிடைக்கும். ஆகவே அதிக முதலீட்டில் பெரிய தொழிற்சாலைகள் ஆரம்பிப்பதை நிறுத்திவிட்டு, குறைந்த முதலீட்டில் அதிகமான பேர்களுக்கு வேலை கிடைப்பதற்கு வசதியாக, சிறு தொழில்கள் மூலம் நூல் உற்பத்தி செய்வதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த மான்யக் கோரிக்கை இன்னும் சிறிது நேரத்தில் விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்படும். அப்பொழுது அங்கத்தினர் தன்னுடைய அபிப்பிராயத்தை தெரிவித்துக்கொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : 1955-ம் வருடத்திலே நூல் உற்பத்திக்கும், துணி உற்பத்திக்கும் மற்ற ராஜ்யங்களைவிட விகிதாசாரத்தில் நூல் உற்பத்தி அதிகமாக இருந்ததனால் துணி உற்பத்தியை அதிகப்படுத்துவதற்கு ஏன் முயற்சி செய்யவில்லை ?

MR. SPEAKER : இந்தக் கேள்விக்கும் மூலக் கேள்விக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது? கனம் மந்திரி அவர்கள் சொன்னது போல் இண்டஸ்டிரீஸ் மான்யம் சிறிது நேரத்தில் விவாதத்திற்கு வரும். அப்பொழுது இதைப் பற்றி பேசலாம்.

*Most Backward Classes*

* 532 *Q.*—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether any legal opinion has been obtained with regard to the extension of the concessions, which have been granted to